# இராமாநுஜர்

தேனடைகள் சிந்தியொரு சிற்றாறாய்ப் பாய்ந்துவர
வானருளை மண்ணில் வரவாக்கும் நோக்கத்தில்
ஓங்கும் மலையருவி ஓலமிட, அன்போடு
'வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்"
கன்றை நினைந்து கசிந்துருகிச் சிந்தியபால்
மின்னுமொளித் திட்டுகளாய் மேவிப் படர்ந்திருக்க
நல்லவர் நெஞ்சங்கள் நாளும் உயர்வதைப்போல்
எல்லாத் திசைகளிலும் ஏராள மாய் மரங்கள்
ஒற்றுமையாய் ஓங்கி ஒளிக்கதிரைத் தாம்மறைக்க
சற்றே நழுவித் தரைசேர்ந்த வெண்கதிர்கள்
புள்ளிகள் இட்டுப் புதுக்கோலம் தான்வரைய
அள்ளித் தெளித்ததுபோல் அற்புதமாம் வண்ணங்கள்
பூவாய், இலையாய், புதராய், கொடிவளைவாய்
தேவாதி தேவனவன் தேர்ந்த எழில் கைவரிசை
நேர்த்தியினைக் காட்டுகிற நீல கிரிக்குன்றில்



ஆர்த்தியாய் மாயன் அருளையே சிந்திக்கும்
ஆற்றலைப் பெற்ற**நல் லான்சக் கரவர்த்தி**
போற்றும் திருமுன்பு புன்மைத் தொழில்வேடர்
நெற்றித் திருமண் நிறைசெய்ய, கைகூப்பிப்
பற்றிடும் அன்பால் பரந்தாமன் பேர்பாடி
ஆடி மகிழும் அழகான நேரத்தில்
வேடர் குலத்தலைவன் மெய்சுருக்கி வாய்பொத்தி
ஆர்வத்தால் நல்லான்பால் அன்போடு பேசிகிறான்
"ஏதும் அறியாத எங்களையும், நல்லருளால்
மாதவன்பால் உய்த்திட்ட மாமணியே, ஊர்பேர்
ஆறியான் சடலத்தை ஆகும்வழி உய்த்த

நிறையுடைய நல்லோரே, நேசத்தால் மாயவனும்
‘நல்லான் எனக்கு’ என்றே நாங்கள் அறியும்வகை
சொல்லும் பெருமை சுமக்கும் பெரியவரே,
உங்கள் குருதேவர் ஓங்கும் திருவரங்கம்
தங்கும் இராமா நுஜர்தம் வரலாற்றை
நாங்கள் அறிந்து நலம்பெறவே சொல்கவென்று
ஆங்கவர்தம் பாதம் அவன்பணிந்தான், நல்லானும்



அன்போடு கேட்கும் அவர்கள் உளம் மகிழ
தன்னெஞ்சை ஆட்கொண்ட சான்றோன் வரலாற்றை
ஈரத் தமிழை இசைத்திசைத்து மற்றதனின்
சீரைப் பயிலும் திருவாயால் சொல்லுகிறார்
“வேடர் குலத்தலைவ, மெய்யன்பு கொண்டவரே
ஓடும் முகிலை ஒருசிமிழ்க்குள் சிக்கவைக்கும்
காரியத்தை ஆற்றும் கடமையத் தந்துவிட்டீர்
“பாருக்குள் மாயன் பணிசெய்ய வைத்திட்ட
ஏந்தலை, நெஞ்சத் தினிமை நிறைந்தவனை
சாந்தம் தவழும் தவமலையை, மேல்வந்து
மாய்க்கும் கலியால் வருந்துகிற ஞாலத்தை
வாய்க்கின்ற வண்மையினால் வந்தளிக்கும் மாதவனை
புண்ணியர்தம் நெஞ்சில் பொருந்தி நிறைபவனை
எண்ணருஞ்சீர் நல்லவர்கள் ஏத்தும் இனியவனை
திக்குற்ற கீர்த்தி சிறந்தவனை, தீதிலியை
தக்க தருணம் தனித்தலைமை கொண்டவனை
அற்புதனை, செம்மை அகத்தவனை, சீரரங்கன்

பொற்பதங்கள் போற்றும் புனிதனை, கற்றோர்கள்
காமுறு சீலனை, காரோய் கருணையினால்
நாமெல்லாம் பற்றவொரு நல்லவழி உய்த்தவனை,
பொன்னரங்கம் என்னில் மயல்பெருகும் பெற்றியனை
இன்புற்ற சீலத்து இராமா நுஜ முனியை
எப்படிச் சொல்லில் இயம்பிடுவேன்? யாவர்க்கும்
ஒப்பரிய சான்றோர் உயர்வுகளைச் சொல்கூட்டும்
வார்த்தை வளைவுக்குள் வார்த்திடுவ தெவ்வாறு?
ஆர்க்கும் திறல்காற்றை ஆடை பிடித்திடுமா?
பூவதனின் மென்மைப் பொலிவையெலாம், சொல்லுதமிழ்ப்
பாவில் அடக்குகிற பாவனைகள் தேறிடுமா?
என்றாலும் என்றாலும் என்தமிழால் கூடுவதை
ஒன்றும் குருவருளால் உங்களுக்குச் சொல்லுகிறேன்
சொல்கடந்த தெய்வம் துணைசெய்க என்றியம்பிச்
சொல்லுகிறார் வாழ்க்கைத் தொடர்.

தண்டமிழ் நாட்டில் தொண்டை மண்டலம்

எண்ணம் சிறந்தோர்க் கிருப்பிடம் ஆகும்

அந்தப் பகுதிக்கு அழகு சேர்க்கும்

திருபெரும் புதூரெனும் சீர்சால் ஊரில்

அருமறைச் சான்றோர் ஆசூரி கேசவன்

காந்தி மதியெனும் கற்பின் தேவி

சாந்தமாய் நடத்தும் தாம்பத்ய வாழ்வின்

பெருமை யாகப் பிங்களச் சித்திரை

திருவா திரைநாள் குருவா ரத்தில்

சுக்கில பஞ்சமி சுபதினத் தன்று

கர்கடக லக்னம் கனிந்த வேளையில்

அருமறை காக்க ஆண்மகன் பிறந்தான்

திருமலை நம்பி சிறுகுழந் தையதன்

ஒளிசேர் முகத்தை உற்றுப்பார்த்தே

இளையாழ் வானென எழிற்பெயர் சூட்ட

திருமகன் வளர்ந்தான்: குருகுல வாசமாய்

திருப்புட் குழியில் தேர்ந்தவோர் ஆசான்

யாதவப் பிரகாசன் எனுமறி ஞர்பால்

ஓதி வந்தார், உற்ற பருவத்து

தஞ்ச மாம்பாள் தன்கரம் பிடித்தான்

எஞ்சாது கல்வியும் இனிதே நடந்தது

புதுப்புது பொருள்கள் புரியத் தொடங்கின.

விதவித மாக விரிந்தது ஞானம்

ஆரா யாமல் ஆசான் சொல்லினும்

பாரா முகமெனும் பாசாங் கின்றி

நெஞ்சிற் பட்டதை நேர்படச் சொல்லுவார்.

வஞ்சனை அறியா மனத்தினர் ஆனார்

தன்னை மறுப்பதைச் சகிக்கா ஆசான்

என்னவகை யேனும் இவரை ஒழிக்கும்

மோச எண்ணம் முகிழ்க்கப் பெற்று

காசி சென்று கங்கை நதியில்

மூழ்கிடச் செய்து முடிக்க எண்ணினார்

சூழ்ச்சி அறியாத் தூயவர் தொடர்ந்தார்

இந்தச் சதியை இவரது தம்பி

விந்தியச் சாரலில் விளக்கிச் சொல்ல

தப்பிச் செல்லத் தனிவழி சென்றார்

அப்பொழுது ஒருவன் அவன் துணை தொடர

அவ்வழி வந்து யாரெனக் கேட்டுச்

செவ்விய வழியில் சேர்க்கிறேன் வாவென்று

இட்டுச் சென்றே இரவில் தங்க

கொட்டகை அமைத்துக் கொடுத்தான், அப்பெண்

தாகம் தணிக்கத் தண்ணீர் கேட்டாள்

ஊகமாய்க் கிணறும் உளயிடம் அறிந்து

சிந்தை அன்பால் சென்றிவர் கொணர

அந்தத் தம்பதி அங்கே இல்லை

இருந்த இடமோ எழில்மிகு காஞ்சி

இரவுப் போதில் எழுநூறு கற்கள்

எப்படிக் கடந்தோம் என்று வியந்தே

ஒப்பில் அருளாளர் உயர்பதம் பணிந்தார்

காசியி னின்றும் காஞ்சி திரும்பிய

ஆசிரிய ரோமிக ஆச்சர்யம் அடைந்தார்

கொல்லவும் தயங்காக் கொடுமை நெஞ்சுள

பொல்லாதவர்தாம் போதிக்கும் ஆசான்

என்ற போதிலும் இராமா நுஜரோ

முன்னைப் போலவே முந்திச் சென்று

தத்துவப் பாடம் சாற்றிடக் கேட்டார்

உத்தமச் சீடர்க் குதாரணம் ஆனார்.

கோயிலுக் கொருநாள் குருவுடன் வருகையில்
வாயிலின் பக்கம் பரமாச் சார்யார்

ஓராண் வழியாய் உபதேசம் பெற்ற
சீரார் வைணவத் திருநெறிச் சீலர்
ஆளவந்தாரின் அருள்நிறைப் பார்வை
ஆளப் பெற்றார் அண்ணல்ரா மாநுஜர்
யாதவர் சீடரின் ஆற்றலை அறிந்து
போதனை மறுத்தார், புகழ்ராமாநுஜர்
திருக்கச்சிநம்பி சீரிய தொடர்பால்
அருளாளன் பணியில் தன்னை ஆட்படுத்திச்
சாலைக் கிணற்றுத் தண்ணீர் தினந்தரும்
வேலையைத் தானே விரும்பி ஏற்றார்
அரங்கம் திரும்பிய ஆளவந்தாரோ
தரம்பார்த் தறிந்து தக்கவர் இவரென
"அரங்கத்திற்கே அழைத்துவா" வென்று
பெரிய நம்பியைத் தூது போக்கினார்
இராமா நுஜரோ இதனைக் கேட்டுப்
பராவும் உள்ளப் பாரிப் போடே
நான்கு நாட்கள் நடையாய் நடந்தார்
நான்காம் நாளில் நகர் நெருங்குகையில்
வருந்தத் தக்க செய்தி வந்தது
"திருஆள வந்தார் திருநா டலங்கரித்தார் "
என்ற செய்தி இடியாய் விழுந்தது
அன்றவர் துடிப்பை யாரே அறிவார்?
யாரைக் காண ஆவல்கொண் டாரோ
யாரைக் குருவாய் அடையவந்தாரோ
அவர்திருமேனி அதனைக் கண்டார்
என்ன செய்வேன் என்றே அலறி
பழுதில் பாதம் பற்றிப் பணிந்தார்
தொழுதார், திருமேனி சுற்றியே வந்தார்
மூன்று விரல்கள் முன்புறம் மடங்கி
தோன்றக் கண்டார், சூழ்ந்திருந் தாரை
"அறிவிரோ?" என்ன, ஆளவந் தார்மனக்
குறைகள் மூன்றைக் குறிப்பதாய் அறிந்து
குறைகள் யாவும் மறையும் வகையில்
நிறைவேற்றுவனென நெஞ்சிற் கொண்டார்
தாமுன் நின்று தக்கன செய்து
யாமுன முனியின் அருந்திரு மேனியைப்
பள்ளிப் படுத்தும் பணியை முடித்தே
அள்ளும் நெஞ்சொடு அடைந்தார் காஞ்சி
திருக்கச்சி நம்பியின் சேஷம் உண்டு
குருவாய் ஏற்கும் குறிப்புடன் ஒருநாள்
வீட்டுக்கு வந்து விருந்துண்ண அழைத்தார்
வீட்டில் அவரிலா வேளையில் அங்கே
திருக்கச்சி நம்பி சென்றுண்டு செல்ல

அருவருப் போடே அவரிலை அகற்றி
தரையை மெழுகினாள் தஞ்சமாம்பாள்
விருப்புடன் சேஷம் வேண்டி விரைந்த
இராமாநுஜரோ ஏமாற்றம் கொண்டார்
தராதரம் அறியாத் தஞ்ச மாம்பாள்மேல்
அண்ணல் வெகுண்டார் அரியதோர் பேறு
நண்ணும் போதே நழுவிட நொந்தார்.

அருளாளனுடன் அளவளாவும்
திருக்கச்சி நம்பி சிறந்த தயவால்
ஆறு சொற்றொடர் அருளாள னிடம்பெறும்
பேறு பெற்றார் பீடுள அண்ணல்
பெரிய நம்பியைக் குருவாய்க் கொள்ளெனும்
அருளாளன்திரு ஆணை யினாலே
அரங்கம் நோக்கி அண்ணல் விரைந்தார்
வருபவர் பெருமை வகையை அறிந்து
குருவோ காஞ்சிப் பயணம் குறித்தார்
இருவரும் வழியில் எதிரெதிர்ப் பட்டனர்
பெருகும் ஏரி மதுராந் தகத்தில்
கருணா கரனின் திருச்சந் நிதியில்
நெஞ்சில் பூக்கும் நினைவுடன் குருவும்
பஞ்ச சம்ஸ்காரப் பரிசளித் தருளி
சீடரின் இல்லம் சேர்ந்து வதிந்தார்
தேடும் ஞானத் தெளிவு பெறாத
தஞ்ச மாம்பாள் தன்குலப் பெருமையே
நெஞ்சில் உயர்வாய் நினைந்து குருவின்
மனைவியைச் சற்றும் மதிக்கா திருந்தாள்
தினந்தினம் ஆங்கே சில்லறைச் சண்டைகள்
ஒன்றாய்ப் பலவாய் உருப்பெற்று வந்தன.
பராவிக் குருவின் பாதம் பணியும்
இராமநுஜரோ இதனை அறியார்
இந்தச் செய்தி எட்டிய தென்றால்
அந்தக் குடும்ப அமைதி கெடுமென
பெரிய நம்பி திருவுளம் கொண்டு
தெரிவிக்காமல் திருவரங்கம் செல
இந்தச் செய்தி இராமா நுஜரறிந்து
சிந்தை கலங்கிச் செய்கை திகைத்து
சஞ்சலம் எய்தித் தவியாய்த் தவித்து
தஞ்ச மாம்பாள் தன்னுடன் வாழ்தல்
இந்தச் ஜென்மத் தினியா காது
பந்தம் விடுப்பதே பான்மையதென்ன
திருக்கச்சி நம்பியைச் சேவித்து முன்னிட்டு
அருளாலன்தனை ஆர்த்தியாய் வேண்டி

தனக்குச் சந்யாசம் தந்திடப் பணிந்தார்.
அனந்த புஷ்கரணி அதில்நீராடி
காவி உடுத்து கையில் நலமே
மேவும் முக்கோல் விளங்கப் பிடித்து
முதலி யாண்டான் தன்னைத் தவிர
எதையும் துறந்தேன் எனச்சூ ளுரைத்துத்
துறவு பூண்டார், தோற்றப் பொலிவின்
சிறப்பை, நேர்த்தியை, செவ்வியைக் கண்டு
யதிராஜர் என இசைத்தார் நம்பி
இதுவே வரதன் இட்ட பெயரென
மக்கள் யாவரும் மகிழ்ந்து போற்றிட
முக்கோல் ஞானி முந்திடும் அன்பால்
நல்லுபதேசம் நவின்றினிதிருக்க
கூரம் சேர்ந்த குறைவில் செல்வச்
சீருள அன்பர் திகழ் கூரேசர்
யதிராஜர்தம் சீடராய் ஆனார்
முதலியாண்டான் கூரத் தாழ்வான்
தண்டு பவித்திரம் ஆகச் சார்ந்தனர்
தொண்டுக் கிழமாயச் சோர்ந்த யாதவர்
சீடரிடம்புதுச் சீடராய்ச் சேந்து
பாடம் கேட்டார் பக்குவமானார்
திருவரங்கத்து அரையர் வந்தார்
யதிராஜர்தனை அரங்கம் அழைத்தார்
அதிகாரம் பெற்ற அரங்கன் ஆணையால்
திருவ ரங்கம் சென்றார் அண்ணல்
வருக வருக உடையவரே என
அராவணை துயிலும் அரங்க நாயகன்
இராமாநுஜரை இனிதே அழைத்தான்
அன்று முதலாய் அரங்கன் கோவில்
தன்னில் பணிசெய் தலைமைப் பொறுப்பை
உடையவர் ஏற்றார், ஒழுங்கு செய்தார்
தடையின்றி யாவும் சரிவர நடக்கும்
நியமம் செய்து நெறிமுறை காத்தார்
அயரா துழைத்தார், அரும்பணி தொடர்ந்தார்.
ஐந்து சீடர்பால் ஆளுக்கொன்றாய்
மந்திரார்த்தங்கள் வகைவகையாக
அளித்திருந்தார் ஆளவந்தார்முனி.
ஒளித்திருந்த உயர்வுகளெல்லாம்
மொத்தமாய்ப் பெற்று முறையாய்த் தொகுக்க
எத்தனை முயற்சிகள் எத்தனை முயற்சிகள்
ஒப்ப ருஞ்சீர் உடையவர் எடுத்தார்
எப்படி அவற்றை இயம்பிடு மாறே!

அறுசீர் விருத்தம்

பெரியநம்பி இடம்மந்த்ர ரத்னமான துவயத்தின் பெருமை கேட்டார்
அரியபெரும் ரகசியங்கள் மற்றுமுள நால்வரிடம் அடைய நெஞ்சிற்
கருதியவர் திருக்கோட்டி யூருக்குக் கால்நடையாய்க் கடுகிச் சென்று
பெருமைபெரும் நம்பியில்லம் சேரும்வரை தண்டனிட்டுப் பணிந்து நின்றார்.

ஒருமுறையா இருமுறையா பதினெட்டு முறைசென்றும் ஒப்பே இல்லாத்
திருவரங்கன் நம்பியிடம் சீடனென ஏற்றிடவே செப்பித் தீர்த்தும்
அருள்புரிய மனமின்றித் திருக்கோட்டி யூர்நம்பி அலைக்கழித்தார்
தருணம் வரும் எனநம்பி உடையவரும் தளராது தாம்முயன்றார்

அண்ணலவர் ஆர்த்தியையும் ஆத்மகுணப் பூர்த்தியையும் அறிந்து கொண்டு
கண்ணெனவே வைணவத்தைக் காத்திடுவார் இவரென்னக் கருத்தில் கொண்டு
தண்டுபவித் திரத்தோடே தாம்மட்டும் வருகவெனத் தானழைத்தார்
திண்ணமுறும் நெஞ்சுடைய திருக்கோட்டி யூர்வாழும் தேர்ந்த ஞானி!

எழுசீர் விருத்தம்

கூரத் தாழ்வான் முதலி யாண்டான்
கூட வரவே உடையவரும்
தீரத்தோடு நம்பி இல்லம்
சேர்ந்து தெண்டம் சமர்ப்பித்தார்
"யாரிவ் விருவர்? தண்டு பவித்திரம்
ஆகத் தானே வரச்சொன்னேன்?
நீரிவ் விருவர் தம்மொடு வந்த
நெறியென்? சொல்க " எனக்கேட்டார்

"எனக்குத் தண்டு பவித்ர மாகும்
இந்த இருவர் " என அண்ணல்
இனிதே சொல்ல நம்பி ஏற்றார்
இவரைத் தவிர எவருக்கும்
இனிநான் சொல்லப் போகும் பொருளை
இயம்பக் கூடா தெனச் சொல்லிக்
கனிவாய் அவர்கட்(கு) எட்டெழுத்தும்
கருத்தும் சொன்னார் திருநம்பி.

அறுசீர் விருத்தம்

எட்டெ ழுத்தின் பொருள்நெஞ்சில்
எட்டும் போதே இனித்ததுவால்
கட்டிப் போட்டே ஆள்பார்த்துக்
கணித்துச் சொன்னால் பெறுவார்யார்?

எட்டும் பொருளை எட்டாமல்
இருக்கச் செய்தால் என்னபயன்?
அட்டி யின்றிப் பாமரரும்
அடையும் வண்ணம் செயல்வேண்டும்

பிறவித் துயரக் கடல்நீந்திப்
பிறரும் உய்ய வேண்டாமா?
இறைவன் அருளைப் பெறுவதிலே
ஏற்றத் தாழ்வு பார்ப்பதுவா?
குறையா ஞானத் திருநாமம்
கொள்ள வருக, எட்டெழுத்தை
அறிய வருக, வருகவென
அழைப்பு விடுத்தார் உயர்வள்ளல்

வேறு



கூடிய கூட்டம் நோக்கிக்
கோபுரம் மீதி லேறி
நாடிய யாவும் நல்கும்
நாரண நாமம் தன்னை
வாடிடும் பயிரைக் காக்கும்
மழையென உள்ளத் துள்ளே

ஓடிடும் அன்பினாலே
        உடையவர் அருளிச் செய்தார்.

செய்தியைக் கேட்ட நம்பி
        சீறினார் 'ஒருவ ருக்கும்
எய்திடக் கூடா தென்றே
        இயம்பிய திருநா மத்தைச்
செய்தியாய் மக்கள் யாரும்
        தெரிந்திடும் வகையிர் சொன்னீர்
எய்துவ தறிவீ ரன்றோ?"
        எனமனம் சினந்து கேட்டார்

"குருவருள் நியமம் தன்னைக்
        கொஞ்சமும் மாற்றி விட்டால்
வருவது நரகம் என்னும்
        வகையினை அறிவேன் , ஆனால்
ஒருவன்யான் மட்டு மன்றோ
        உய்வகை இன்றிப் போவேன்
ஒருபெரும் மக்கள் கூட்டம்
        உஜ்ஜீவிப் பார்கள் அன்றோ?"

தம்மையே வென்று விட்ட
        சத்திய வார்த்தை கேட்டு
நம்பியும் மகிழ்ந்தார், 'உம்மால்
        நான்பயன் மிகவும் பெற்றேன்
எம்பெரு மானாரோ நீர்?
        இனிவரும் கால மெல்லாம்
உம்பெய ராலே யாவும்
        உயர்வுறும் என்றி சைத்தார்.

ஐம்பெரும் குருக்கள் தம்மை
        அண்டியே தத்வார் தங்கள்
எம்பெரு மானார் பெற்றார்
        எவருமே ஒன்றாய் எண்ணி
தம்மரும் பணியைச் செய்தார்
        தக்கபல் சீட ரோடே
செம்மைசேர் வைண வத்தைச்
        சீருற நாட்டி வைத்தார்

வேறு

தன்மனைவி கண்களிலே தான்மயங்கி வெயிலினிலே தளரா வண்ணம்
மின்னுகிற குடைபிடைத்து வீதியிலே வருகின்ற வில்லி தன்னை

அன்புடனே தானழைத்துத் திருவரங்கன் கண்ணதனின் அழகைக் காட்டித்
தன்னுடனே சீடனென இருக்கின்ற தகுதியினைத் தந்தார் அண்ணல்.

அருள்விளங்கும் திருப்பாவை பாடிப் பாடி

அதன்பொருளில் தன்னுள்ளம் நாடி நாடி

தெருவினிலே சென்றேழு வீட்டில் பிகைூஷ

தினந்தினமும் ஏற்றுண்ணும் வழக்கம் கொண்டு

வருகையிலே 'உந்துமத களிற்றன் ' என்னும்

வளர்பா சுரம்ஒருநாள் பாடி வந்தார்

பெரியநம்பி மகளான அத்து ழாயும்

பிகைூஷயிடத் தாழ்திறந்து வந்து நின்றாள்

வளையொலிக்க நப்பின்னைப் பிராட்டி வந்து

வாயிலிலே தாழ்திறக்கும் காட்சி நெஞ்சில்

திளைத்திடவே வந்தவரோ அத்துழாயின்

தெரிசனத்தில் நப்பின்னை வடிவம் கண்டார்

உளத்தினிலே மகிழ்வெய்திப் பாதம் வீழ்ந்தார்

ஓடோடித் தந்தையிடம் மகளும் சொல்ல

களிப்புடனே 'உந்துமத களிற்றன் பாடிக்

கதவருகே வந்தாரோ?" கேட்டார் நம்பி.

வேறு

சோதனை பற்பல தாக்கிடும் போதெலாம்

துணிவாக நலமாக்கினார்

தொண்டர்கள் சீடர்கள் ஆயிர மாயிரம்

சூழ்ந்திட அருள்தேக்கினார்

வாதிட வந்தவோர் அறிஞரை வென்றவர்

வைணவம் தழைக்க வைத்தார்

மாறான மதம்கொண்ட தம்பியை மாற்றினார்

வரலாறு தான்படைத்தார்

போதமாய் வியாசரின் பிரம்மசூத் திரத்திற்கோர்

புத்துரை தானமைத்தார்

புகழ்சேரும் ஸ்ரீபாஷ்யம் எனவாணி சிரம்வைத்துப்

போற்றிடும் பெருமை சேர்த்தார்.

தீதற நாடெலாம் விஜய யாத்திரை செய்து

ஜெயக்கொடி நாட்டிவந்தார்

திருமலை அப்பனுக்கு ஆழியும் சங்கமும்

திகழ்ந்திடச் செய்தளித்தார்.

குறை மூன்று கொண்டுதிரு நாடலங் கரித்தகுரு

குறைகளை நிறைவாக்கினார்

குறுங்குடி நம்பிக்குத் திருமண்காப் பிட்டவரின்

குருவாகத் தான் மாறினார்

சிறைபட் டிருந்தபல தத்துவப் பொருளெலாம்

தெளிவாக வெளியாக்கினார்

சிந்தையது தூய்மையின் சிறப்பினை வில்லிவழி

செய்கையில் காட்டுவித்தார்

நிறைவுற் றிருந்த பல சீடர்கள் நெஞ்சிலே

நினைவிலே திருவாகினார்

நீடுவட நாடெலாம் சென்றுபல மடங்களை

நிறுவினார் புகழ்குவித்தார்

செறிவுறும் நீலனின் திருப்பாடல் அழகிலே

சிந்தை பறிகொடுத்தார்

திகழுறும் சடகோபன் பொன்னடி என்னவே

சிறப்புகள் பெற்றுயர்ந்தார்.

உடையவர் பெருமை உயர்வுக ளெல்லாம்
அடியேன் அறிந்த அளவினில் சொன்னேன்
என்று நல்லான் இயம்ப, வேடர்கள்
ஒன்றும் அன்பால் உவகை கொண்டே
ஆடிப் பாடும் அழகிய நேரம்
ஓடி ஓடி ஒருவர் வந்தார்
வந்த வேக வகையினைக் காட்டி
முந்தும் வியர்வை முன்வழிந்தோட
நெற்றித் திருமண் நெடுமால் அடியராய்
உற்றவர் அவரென உறுதிப் படுத்த
வேடர் தலைவன் விரைந்து வணங்கி
'தேடி எதையோ திரிவது போல
இவ்விடம் வந்தீர் ஏனிப் பதட்டம்?
எவ்விடத் தவர்நீர் இயம்புக" என்றான்
"அரங்கம்" என்றே அவரும் இயம்ப"
"எம்மரும் தலைவர் எங்கள் தேவர்
எம்பெருமானார் எப்படி உள்ளார்
சாற்றுக" என்றே தலைவன் கேட்க
தேற்ற முடியாச் சிந்தை வருந்தி
அழுது புரண்டார் அரங்கன் அடியார்

அழுதனர் வேடர், அழுதது அருவி.
விம்மிக் கொண்டேவேடர்கள் கேட்டனர்
"எம்பெரு மானார்க் கென்ன வாயிற்று?"
ஆழும் அன்பால் அவர்விடை சொன்னார்
"சோழ மன்னர் சூழ்ச்சிகள் செய்து
சைவ வெறிதன் தலையேறி நிற்க
சிவனே நாயகன் என்று செப்பிட
அண்ணலை அரசன் அவைவரப் பணித்தான்.
எண்ணம் அறிந்தே இராமானுஜரும்
ஆடையை மாற்றி அரங்கம் நீங்கினார்
தேடிப் பார்க்கிறேன் தென்படவில்லை"
என்று வந்தவர் இயம்ப, வேடர்கள்
சென்று மேற்குத் திசையில் தேடினர்
ஐந்து நாட்கள் அடைமழை பெய்தது.
சிந்தை தளர்ந்து தேடிடும் போது
கொட்டும் மழையின் குளிரில் நடுங்கி
எட்டி வந்தது இராமாநுஜர்குழு.
வேடர்கள் அங்கு விரைவாய்ச் சென்று
வாடும் கூட்ட வகையைப் பார்த்து
யாரெனக் கேட்க, "அரங்கம் எங்கள்
ஊர்' எனப் பதிலை உரைத்தனர் ஒருவர்.

"எம்பெருமானார் எங்கே போனார்
உம்மில் யாரும் உரைக்கக் கூடுமோ?"
என்று கேள்வி எழுப்பினர் வேடுவர்.
பொன்றும் குளிரில் நின்றுகொண்டிருந்த
அண்ணல் தன்னை அவர்கள் காட்டினர்.
கண்ணீர் மல்கக் கலங்கினர் வேடுவர்
அடியில் வீழ்ந்தே அழுதனர் சிலபேர்
துடிக்கும் நெஞ்சொடு துவண்டனர் சிலபேர்
என்ன சொல்கிறோம் என்பதை மறந்து
சொன்னதைச் சொன்னதைச் சொன்னார் சிலபேர்
தினையில் தேனை சேர்த்துக் குழைத்தே
"இனியவரே இதை ஏற்பீர்" என்றனர்
கள்ளம் சற்றும் கலக்காத வேடர்
உள்ளம் நோக்கி உடையவர் மகிழ்ந்தார்
அண்ணல் இராமனுக் கருங்குகன் அன்பாய்
உண்ணச் சொன்ன ஒப்புமை நோக்கி
உரிமையாத் தந்த உணவை உண்டார்
இரவை அங்கே இனிதே கழித்தார்
நல்லான் தமது நா தழுதழுக்க
வல்லார் பாதம் வணங்கிக் கிடந்தார்.
வேடர் கூட்டம் வேண்டித் தொடர

காடு கடந்து கால்நடையாக
பலநாள் நடந்து பலவூர் சென்று
தலந்தலமாகத் தரிசனம் செய்து
மைசூர் மாநிலம் வந்து சேர்ந்தனர்.
ஹொய்சாளர்கள் குலத்தைச் சேர்ந்த
வெட்டுப்பட்ட விரலை உடைய
விட்டல தேவ வேந்தன் தலைநகர்
தொண்ட னூரைத் தொண்டர்களோடு
கண்டே அங்கொரு காட்டுப் பகுதியில்
அண்ணல் வந்தே அரங்கனைத் தொழுதார்.
சுண்டு விரல்கள் துண்டிக்கப் பெற்ற
மன்னரைக் காண மறுத்தனர் சமணர்கள்
என்னதான் பெரியவன் எனினும் சிறிதும்
குறையுறுப் புள்ள கோவேந்தன் தனை
அறவோர் காணல் ஆகா தென்றனர்
இறைவன் படைப்பில் எவர்குறையுடையார்.?
அறவோர் நெறிமுறை அன்பொன் றல்லவோ?

தன்நகர் வந்துளார் தவமுனி ஒருவர்
என்னுமோர் செய்தி எட்டிட அமைச்சர்
தன்னை அனுப்பினான் அரசன், அமைச்சரும்
அன்பொடு உடையவர் தம்மை அழைக்க
வருக என்னும் வார்த்தையினுள்ளே
உருகும் அன்பின் ஒளியைக் கண்டே
உடையவர் சென்றார்,, உவகை மிகவும்
அடைந்தனன் மன்னன், அவனது மகளைப்
பிடித்திருந்த பேயைத் தன் திரு
அடித்தல நீரால் அண்ணல் விரட்ட
அன்பொடு இராமா நுஜர்அடி போற்றி
மன்னன் மகிழ்ந்தான், வைணவன் ஆனான்
விஷ்ணு வர்த்தனன் எனப்பெயர் பெற்றான்
இஷ்டம் போல இருந்து வந்த
சமணர் கூட்டம் தாங்காக் கொதிப்பால்
பொங்கி எழுந்து புண்ணியர் தம்மை
வாதுக் கழைத்தது. வாதில் தோற்றால்
சாதல் என்னச் சத்தியம் செய்தது.
முரட்டுத் தர்க்கம் மொழிந்த சமணரை
அருட்திறத்தாலே அண்ணல் வென்றார்
தோற்ற சமணர் தொழுதனர், சிலபேர்
மாற்றம் பெற்று வைணவ ரானார்
மடிந்திட வேண்டாம் என மறுத்துரைப்பினும்
அடம்பி டித்தவர் அனலில் பாய்ந்னர்

வேறு

புற்றிலே மறைந்து யார்க்கும்
    புலப்படா மூர்த்தி தன்னைப்
பற்றியே கொண்டு வந்து
    பாங்குடன் வேந்தன் மூலம்
உற்றதோர் கோயில் கட்டி
    உற்சவ மூர்த்தி தன்னைப்
பெற்றிட டெல்லி சென்று
    பிள்ளையைப் போல்கொணர்ந்தார்.

வேறு

திருநா ரணபுரம் சேர்ந்தவர் செய்தவை
    செப்பிட வேண்டுமெனில்
ஒருநா போதா தொருநாள் போதாது
    உயர்வுகள் பலவாகும்
வருநாள் எல்லாம் திருநாள் ஆக
    வளம்பெறும் முறையாக
பெருமான் செய்த பெருமைகள் எல்லாம்
    இன்னும் பெயர்சொல்லும்!

எண்பது வயது தாண்டிய போதும்
    இவர்செய்திருப்பணிகள்
எண்ணில் அடங்கா எண்ணில் ஒடுங்கா
    ஏற்றம் பெரிதாகும்
தண்ணீர் தேங்கும் ஏரி சமைத்துச்
    சமுதாயப் பணியும்
எண்ணம் சிறக்கச் சமயம் வளர்த்தே
    இறைபணியும் செய்தார்.

திருக்குலத் தாரும் கோயில் சென்று
    சேவைகள் செய்முறையும்
அருட்குணத்தாலே அண்ணல் அமைத்த
    அன்றே புதியதொரு
சரித்திரம் தோன்றும் வித்தினை இட்டார்
    சமத்துவ நெறி காத்தார்
திருவரங் கன் துயில் அரவணை என்னச்
    சேவை நிலையாணார்.

வேறு

நோயினால் சோழ மன்னன்

நொடித்தனன் எனவ றிந்து
தாயினும் அன்பு கொண்ட
தயாநிதி கூரத் தாழ்வான்
நேயமாய்ப் பாசம் கொண்ட
நிறைமணி பெரிய நம்பி
ஆயவர் நிலைமை பற்றி
அறிந்திட ஆள்விடுத்தார்.

அரசனின் நியாய மற்ற
ஆணையை மறுத்ததாலே
இருவரும் கண்ணி ழக்க
ஏற்புடைப் பெரிய நம்பி
திருவடி சேர்ந்தார் என்ற
செய்தியைக் கேள்விப்பட்டு
பெருகிடும் கண்ணீர் சோரப்
பிள்ளையைப் போல் துடித்தார்,

வேறு

தன்னைப்போல் சிலையொன்று செய்யச் சொல்லித்
தன்மேனி யாலதனைத் தழுவித் தந்தே
இன்னேயான் அரங்கத்திற் கேகுகின்றேன்
எனச்சொல்லி ஆழ்வானைக் காணு தற்கே
முன்னோடும் ஆர்வத்தால் விரைந்து சென்றார்
முந்துமருள் ஆழ்வானைக் கண்டார்; ஓடி
என்னேயென் னே என்று தழுவிக் கொண்டார்
ஏதும் மொழி சொல்லயிய லாது நின்றார்.

அருளாளன் திருமுன்பு கூட்டிச் சென்றார்
"ஆழ்வானே விழிகேளும்" என்று சொன்னார்
அருளாலே ஞானக் கண் அளித்திருக்க
யாதுக்கோ ஊனக்கண் ?" என்று சொல்லி
உருகாத நெஞ்செல்லாம் உருகும் வண்ணம்
உதவாத எதிரிக்கும் உதவவேண்ட
பெருமானார் உத்தரீயம் மேலே வீசி
பெருமையெலாம் உம்மாலே பெற்றேன் " என்றார்

போற்றுகிற முறையினிலே கோயில் தொண்டு
புரிந்திடவே ஆங்காங்கே நியமம் செய்து,
ஏற்றமுறும் பலநூல்கள் இயற்றி மக்கள்
எண்ணமெலாம் தான்நிறைந்து, வந்த வாழ்வில்
நூற்றிருப தாண்டுகளாய்த் தொண்டு செய்யும்
நோன்பினிலே தளர்ந்த உடல் பொலிவைக் கூட்ட
ஆற்றுகிற பணியெல்லாம் முடித்தோம் என்னும்

அமைதியிலே சேடனுடன் அண்ணல் சேர்ந்தார்

எட்டாத ஆழத்தில் கொட்டிக் கிடந்திட்ட
எண்ணங்கள் ஓராயிரம்
ஏழைக்கும் பாழைக்கும் எட்டவே வழிசெய்த
எம்பெருமான் வாழியே!
கட்டாகத் துன்பங்கள் கதிசொல்லி வந்தாலும்
கலங்காத மனம்வாழியே!
கவலைப் படுவோரின் கவலையைப் போக்கவே
கவலைகொள்வோர் வாழியே
ஒட்டாத தூரத்தில் ஒதுங்கிக் கிடந்தோர்க்கும்
உயர்வளித்தோர் வாழியே!
ஒருவரையும் தாழ்வாக எண்ணாத பேராற்றல்
உள்ளம்கொண் டோர் வாழியே!
செட்டாக நிர்வாகச் செம்மைகள் செய்தபெரும்
ஸ்ரீராமா நுஜர் வாழியே!
திகழ்ஞானப் பிங்களச் சித்திரை ஆதிரை
ஜெகத்துதித்தார் வாழியே!!